நனிமிகப் பழம்பெரும் சீன எழுத்தாளரின் படைப்பின் ஒரு பகுதி, அண்மைக்கால வரலாற்று ஆய்வு அளித்த நனிமிகு வியத்தகுமுடிவு'' எனப், பால் பெல்லியோட் என்பாரை அறிமுகம் செய்துள்ளார்.

பின்னர், 44, 45 பக்கங்களில், ''கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் காஞ்சியும் சீனாவும்'' என்ற தலைப்புள்ள இரண்டாம் அதிகாரத்தில், முதல் பத்தியில், ''கி. பி. முதலாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த, ''பான் கௌ'' (pan kow) என்ற சீன எழுத்தாளர், தம்முடைய ''இட்சின் ஹன் சௌ'' (Tsein han chow) என்ற நூலில், ''தொன்கின்'' (Tonkin) வளைகுடாவின் உள் நாடாம், ''மேல் அன்னம்'' (Upper Annam) என இப்போது வழங்கப்படும் ''ஜே-நன்'' (Je-Nan) நுழைவாயிலிலிருந்து புறப்பட்டு, படகுவழியாக, ஐந்து திங்கள் பயணம் செய்து, 'தொன்-யுவான்' (Ton-Ywan) நாட்டை அடைந்தோம். பின்னர்க் கடல் வழி நான்கு திங்கள் பயணத்திற்குப் பின்னர், 'யி-லௌ-மொ' (Yi-Low-Mo) என்ற நாட்டை அடைந்தோம். மேலும் இருபது நாட்களுக்கு மேற்பட்ட கடல் பயணம் மேற்கொண்ட பின்னர், ''சென்-லி'' (Chen-Li) என்ற நாட்டைஅடைந்தோம், அங்கிருந்து. நீங்கள், பத்துநாட்களுக்கு மேற்பட்ட நிலவழிப் பயணம் மேற்கொண்டால், 'பவு-கன்- தௌ-லௌ' (Fow-Kan-Tow-Low) என்ற நாட்டை அடைவீர்கள். அந்நாட்டி லிருந்து படகு வழியாக இரு திங்களுக்குமேல் பயணம் செய்தால், 'ஹௌங்-டெக்' (Howang teche) என்ற நாட்டை அடைவீர்கள். அந்நாட்டுப் பழக்கவழக்கங்கள், 'தச்சௌ-யை' (Tchow-yai) நாட்டுமக்கள் பழக்கவழக்கங்கள் போலவே உள்ளன. இந்நாடு பரந்து அகன்று, மக்கள் பெருக்கத்தால் மிகுந்து, அரும்பொருட்கள் பலவற்றை ஆக்குவதாக விளங்கு கிறது. கி. மு. 140-86 காலத்தவரான, பேரரசர் 'வௌ' (Wow) காலம் முதல், அரும்பொருட்களைச் சீனாவிற்கு அனுப்பி வைக்கிறது'' என எழுதிவைத்திருப்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.

''பான்-கௌ'' என்ற சீன எழுத்தாளன் கூறியதை, முதல்பத்தியில் எடுத்துக் காட்டிய திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள், இரண்டாவது பத்தியில், ''டௌங்-பாவோ' (Towng-pao)என்ற நூலில், திருவாளர் 'பால்பெல்லி யோட்' அவர்கள், 'ஹௌஆங்-டெக்' (Hawang-teche) என்ற தொடருக்குப், பல்வேறு வரலாற்றுப் பேராசிரியர்கள் அளிக்கும் விளக்கங்களையெல்லாம் மறுத்துவிட்டு, 'ஹன்' (Han) காலத்துச் சீனமொழி ஒலியியல் கூற்றுப்படி, ஹௌ ஆங்-டெக்' என்பதற்குக் ''காஞ்சி'' என்பதே ஏற்புடைய இணையாம்'' எனத் திருவாளர் பெர்ரண்ட் (Ferrand) என்பார் கூறும் விளக்கத்தையும் எடுத்தாண்டுள்ளார்.

அதுமட்டுமல்லாமல், கி. பி. 11ஆம் நூற்றாண்டில், சோழப் பேரரசு, சீனப்பேரரசுக்கு அனுப்பிய தூதுவர், சீனா சென்றடைய எட்டுத் திங்களை எடுத்துக் கொண்டுள்ளார் என்பதை எடுத்துக்காட்டுவதன் மூலம், கி. மு. இரண்டாம் நூற்றாண்டில். சீன யாத்திரிகன் ஒருவன், காஞ்சி வந்துசேர, 12 திங்களை எடுத்துக்கொள்ள நேர்ந்தது என்பது ஏற்கக் கூடியதே என்பதை வலியுறுத்தும், திருவாளர் பால் பெல்லி யோட், அவர்களின் வாதத்தையும் எடுத்து வைத்துள்ளார், திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் (பக்கம் : 45)

ஆக, மேலே கூறியிருப்பனவற்றையெல்லாம் எடுத்தாண்டிருப்பதன் மூலம், கி. மு. இரண்டாம் நூற்றாண்டு காலத்திலேயே காஞ்சிநாடு, 'காஞ்சி' என்ற பெயரிலேயே இடம் பெற்றிருந்தது. சீன நாட்டிற்கு அரும்பொருட்களை அனுப்பும் வளம்மிக்க நாடாகவும் திகழ்ந்தது என்பதற்கான தம்முடைய ஒப்புதலைத், திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள், தந்துள்ளார் என்பது தெளிவாகிறது.

மேலும், சென்னைப் பல்கலைக் கழகத்தில், பண்டை வரலாறு மற்றும் தொல்பொருள் துறைப் பேராசிரியராகப் பணிபுரிந்த திருவாளர். தே. வை. மகாலிங்கம் அவர்கள் 1963ல் ஆற்றிய ஆறு விரிவுரைகளின் தொகுப்பாக, 1968ல்

வெளியிடப்பட்ட, "தென்னிந்திய பண்டைவரலாற்றி காஞ்சீபுரம்" (Kancheepuram in Early South Indian Histor என்ற தம் நூலில், "காஞ்சீபுரம், அதன் தொடக்கம்" (Kancheepuram its begining) என்ற முதல் அதிகாரத்தி பக்கம் 9ல் கி. மு. இரண்டாம் நூற்றாண்டில், காஞ்சியி நிலைகுறித்து, திரு. பான்கொன என்ற சீன எழுத்தாள கூறிய இதே நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளார்.

1939ஆம் ஆண்டில், அதாவது திருவாளர். பி. டி. சீனிவா அய்யங்கார் அவர்கள், 'தமிழர் வரலாறு' என்ற தம்முடை நூலை வெளியிட்ட பத்து ஆண்டுகள் கழித்து, வெளியிட பட்ட திருவாளர், நீலகண்ட சாஸ்திரியார் அவர்களின் "தென்னிந்தியா பற்றிய வெளிநாட்டவர் குறிப்புக்கள்" என் நூலையோ, திருவாளர். தே. வை. மகாலிங்கம் அவர்களி நூலையோ திருவாளர் அய்யங்கார் அவர்கள் பார்த்திருக் வாய்ப்பு இல்லை. ஆகவேதான், 'காஞ்சி' என்பது, தமிழ் சொல் அன்று, "காஞ்சீபுரக" என்ற சமஸ்கிருதச் சொல்லின் சுருங்கிய வடிவம்; அதன் தமிழாக்கமே கச்சி என்றும் காஞ்சிமண்டலம் தமிழரசர்களால் ஆளப்படவில்லை; மாறாக சமஸ்கிருத ராஜாக்களால் ஆளப்பட்டிருந்தது என்ற தவறான முடிவிற்குத் திருவாளர் அய்யங்கார் அவர்கள் தள்ளப் பட்டுள்ளார்.

---



தலைமை நிலையம் :
154, டி. டி. கே. சாலை,
ஆள்வார்பேட்டை, சென்னை-18.

கிளை நிலையங்கள் :
79, பிரகாசம் சாலை (பிராட்வே)
சென்னை-108.

திருநெல்வேலி-6. மதுரை-1.
கோயமுத்தூர்-1. கும்பகோணம்-1
திருச்சிராப்பள்ளி-2. சேலம்-1.

விலை ரூ. 60-00

அப்பர் அச்சகம், சென்னை-108